11th August 1960]

SRI N. K. PALANISAMI : Sir, while the INTUC which has got only 2,000 members has been recognised, the AITUC having a membership of more than 10,000 has not been recognised. May I know why there is delay in recognising it?

THE HON. SRI R. VENKATARAMAN : The AITUC has not furnished the list of members called for by the Government.

MR. SPEAKER : The Hon. Minister for Works is not in Madras. We shall postpone his question No. 109.

*Supervisors for the Co-operative Agricultural Farms*

* 110 *Q*.—SRI M. P. SARATHI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

கூட்டுறவு விவசாயப் பண்ணைகளில் மேற்பார்வையிட நியமிக்கப்பட்டுள்ள அதிகாரிகள் விவசாயத் துறையில் விசேஷப் பயிற்சி பெற்றவர்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : Senior Inspectors of Co-operative Societies who supervise and manage Co-operative Farming Societies have not undergone any special training in agriculture. But they are assisted by Agricultural Demonstration Maistries or Agricultural Fieldmen.

SRI S. M. ANNAMALAI : ஸார், இப்படி விவசாயப் பண்ணைகளில், சீனியர் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கும் போது, ட்செயினிங் இல்லாமல் இருப்பதால், அவர்களுக்கு நிலத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாமல் இருக்கிறது. ஆகையினால், அவர்களுக்கு ட்ரெயினிங் கொடுத்து, அதன் மூலமாக அவர்கள் அதிக உபயோகமுள்ளவர்களாக இருக்க சர்க்கார் அவர்களுக்கு ட்ரெயினிங் கொடுக்க முன் வருவார்களா ?

THE HON. SRI R .VENKATARAMAN : இதிலே இரண்டு பிரச்சினைகள் இருக்கின்றன. ஒன்று, விவசாயத் தொழில் பயிற்சி; இரண்டாவது கூட்டுறவுப் பயிற்சி. கூட்டுறவுப் பயிற்சி பெற்றிருக்கிறவர்கள், பணம் கடன் வாங்குவது, கடனை வினியோகம் செய்வது, நிர்வாகம் இவற்றிலெல்லாம், கவனம் செலுத்திக்கொண்டிருக்கிறார்கள். விவச்சாயத்தைப் பற்றிய அலுவல்களை, அக்ரிகல்சர் பீல்ட்மென், டெமான்ஸ்டிரேடர் இவர்கள் கவனிக்கிறார்கள். சாதாரணமாக சீனியர் இன்ஸ்பெக்டர்களுக்கு குறைந்த காலப் பயிற்சி அளிப்பதனால், அவர்கள் எல்லாப் பயிற்சியும் அடைய முடியாது.

SRI A. GOVINDASAMY : கூட்டுறவுப் பண்ணை வைப்பதன் நோக்கம், உற்பத்தியைப் பெருக்குவது என்பதினால், விவசாயத்தில் கூட்டுறவுப் பயிற்சியும் அளிக்க அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI R .VENKATARAMAN : அதுதான் இப்பொழுது சொன்னேன், இதிலே விவசாயப் பயிற்சி ஒன்று, நிர்வாகப்

பயிற்சி மற்றென்று. கூட்டுறவுக்கு அதில் பயிற்சி பெற்ற நிர்வாகஸ்தர்களையும், விவசாயத்திற்கு அதற்கு ஏற்ற டெக்னிகல் பர்சனல்களையும் நியமிக்கிறோம்.

SRI M. D. THIAGARAJA PILLAI : தலைவர் அவர்களே, கூட்டுறவு பண்ணைகளை அபிவிருத்தி செய்ய, சீனியர் இன்ஸ்பெக்டர்களையும், பீல்ட்மென்களையும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனால், அநேக சங்கங்களுக்கு, அந்த உத்தியோகஸ்தர்கள் உதவி கிடைப்பதில் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, சீக்கிரமாகவே நியமனம் செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : போதுமான பீல்ட் ஆபீசர்கள், அக்ரிகல்சர் பீல்ட் ஆபீசர்கள் கிடைக்காததுதான் அதற்குக் காரணம்.

SRI S. M. ANNAMALAI : சீனியர் இன்ஸ்பெக்டர்கள் நியமிக்கும் போது, விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்குத் தனிச் சலுகை அளிக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சீனியர் இன்ஸ்பெக்டர்கள் எந்த குடும்பத்தைச் சேர்ந்தவர் என்று பார்ப்பதற்கில்லை ; சீனியர் இன்ஸ்பெக்டர்களைத்தான் போட முடியும்.

SRI A. GOVINDASAMY : இதுவரை கூட்டுறவுப் பண்ணைகளில் ஏற்பட்ட அனுபவத்தை ஒட்டி, அதைத் திருத்தியமைக்க அரசாங்கத்திற்கு, புதிய நடவடிக்கை எடுக்க, உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒன்றும் இல்லை.

SRI M. K. SOMASUNDARAM : சார், விவசாயத்திற்குக் கடனோ, உரங்களோ வழங்கும்போது, பயிரிடும் காலங்களை ஒட்டி, தக்க சமயத்தில் வழங்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is a separate subject, Sir,

*Land acquisition.*

*111 *Q.*—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

வட ஆற்காடு மாவட்டம் ஆரணி தாலுகாவில் எத்தனை பட்டாதாரர்களின் நிலங்கள் நீர்ப் பிடிப்பு என்று சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The total number is 2,072.

SRI S. M. ANNAMALAI : எவ்வளவு ஏக்கர் நிலங்கள் சர்க்காரால் எடுத்துக்கொள்ளப்பட்டன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : 1,765 ஏக்கர்கள்.